[13th March 1959

### *P.W.D. Workers' Union*

* 757 *Q.*—SRI K. SATTANATHA KARAYALAR : Will the Hon. the Minister for Public Works be pleased to state—

(*a*) the demands of the Public Works Department Workers' Union; and

(*b*) the steps taken to ameliorate their grievances?

THE HON. SRI P. KAKKAN : (*a*) & (*b*) Attention is invited to the statement[a] placed on the table of the house.

SRI K. SATTANATHA KARAYALAR : பி.டபிள்யூ.டி.யில் வேலை செய்யக் கூடிய ஊழியர்கள் மொத்தம் எவ்வளவு பேர்கள் இருக்கிறார்கள் ? அவர்களில் டெம்பரவரியாக உள்ளவர்கள் எத்தனை பேர்கள் ?

THE HON. SRI P. KAKKAN : இங்கே தகவல் ஒன்றும் இல்லை. அங்கே இருக்கிற ஊழியர்களில் 192 பேர்களை பர்மனென்டாக்கி இருக்கிறார்கள்.

SRI K. ANBAZHAGAN : பொது மராமத்து இலாகா கன்டின்ஜென்சி ஊழியர்கள் கடைத்தர வகுப்பாளர்கள் இருக்கிறார்கள். சென்ற ஐந்தாறு ஆண்டுகளாக அவர்கள் வேலை செய்து வந்தும் அவர்கள் நிரந்தரமாக்கப்படவில்லை. அவர்களை நிர்ந்தரமாக்க அரசாங்கம் முன் வருமா ?

THE HON. SRI P. KAKKAN : யார் யார் ஐந்து வருடங்களுக்கு மேலாக வேலை செய்து வருகிறார்களோ அவர்களை நிச்சயமாக நிரந்தரமாக்க ஏற்பாடு செய்யப்படும்.

### *Gudiyatham Municipality*

* 758 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN : Will the Hon. the Minister for Local Administration be pleased to state—

(*a*) the schemes for which the Gudiyatham Municipality has applied for loans and grants, and the amounts so applied for in 1957–58; and

(*b*) whether they have been sanctioned?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : (*a*) & (*b*) A statement[b] showing the list of schemes for which the Gudiyatham Municipality asked for loans and grants in 1957–58 and the action taken thereon is placed on the table of the house.

SRI V. K. KOTHANDARAMAN : மேஜையின்மீது வைக்கப்பட்ட ஸ்டேட்மென்டில் கண்டபடி "டி" யில் இருக்கக்கூடிய ஆளியார் ஸ்ட்ரீட் கொச அண்ணாமலை தெருவுக்கு லோனும் கிராண்டும் சாங்க்ஷன் செய்யப்பட்டிருக்கிறது. "ஏ..பி.,சி." யில் கண்ட ரோடுகளுக்கு சாங்க்ஷன் செய்யப்படவில்லை என்று கண்டிருக்கிறது. அதற்குக் காரணம் என்ன ? இனி மேலாவது கவனித்து சாங்க்ஷன் செய்யப்படுமா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : நிதி நிலைமையைப் பொறுத்துக் கடன் கொடுக்கப்படுகிறது. எதற்கு முதலிடம் கொடுக்க வேண்டுமென்று முக்கியமாகக் கருதப்படுகிறதோ அவைகளுக்கு முதன்மை கொடுக்கப்படுகிறது.

---

[a] Printed as Appendix I on pages 278–280 infra.

[b] Printed as Appendix II on page 281 infra.